# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 7 | இதழ் 6 | அக்டோபர் 10, 2020 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 7 | Issue 6 | October 10th, 2020 | Annual Subscription Rs. 100/-



ஆன்மிகம் போதும்;
அலுவல்களைப் பார்ப்போம்!



நமது அக உணர்வுகளை சுதந்திரமாக விட்டு விட்டால் போதும்; அவற்றை ஒழுங்கு படுத்தத் தேவையில்லை.

–என்பதை அறிவுப்பூர்வமாகப் புரிந்து கொள்வதுதான் ஞானம்.

இதைப் புரிந்து கொண்ட நிலையில் ஆன்மிகத்துக்கு தனிப்பட்ட முக்கியத்துவம் எதுவுமே தேவையில்லை.

உண்மையில் உலகியல் வாழ்வு தான் முக்கியமானது. ஆன்மிகம் என்பதும் ஞானம் – விடுதலை என்பதும் அதற்கு உதவியாக வந்தவையே.

– ஸ்ரீ பகவத்

# பகவத் பாதை

தமிழ் மாத இதழ்



## ஸ்ரீ பகவத் குடில்கள்



அன்பிற்கினிய ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் பவன் ஆசிரமம், சேலம் பெரிய கவுண்டாபுரத்தில் இயற்கை எழில்மிகு ஜருகுமலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளதை அனைவரும் அறிவோம்.

இங்கு ஒவ்வொரு மாதமும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் சிறப்பாக நடைபெற்று வருகிறது. இதில் பலரும் கலந்துகொண்டு ஞானத் தெளிவு பெற்றுச் செல்கின்றனர்.

முகாம்களுக்குக் குடும்பத்துடன் வருபவர்கள் சேர்ந்து தங்குவதற்கு போதிய வசதியில்லை.

ஆதலால் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி இங்கு குடும்பத்துடன் வந்து தங்கி செல்வதற்கு ஏற்ற வகையில் எல்லா வசதிகளுடன் கூடிய 8 பெரிய (11'x16') அறைகளும் 8 சிறிய (8'x8') அறைகளும் தனித்தனி குளியலறைகளுடன் (4'x6') அமைக்கப்பட்டு கட்டிட வேலைகள் நடைபெற்று வருகின்றன.

இதில் 8 பெரிய அறைகளுக்கான ஸ்ரீ பகவத் காட்டேஜ் உறுப்பினர் சேர்க்கை நிறைவடைந்துவிட்டது.

சிறிய அறைகளுக்கான உறுப்பினர் நன்கொடை ரூபாய் 3 லட்சம் என நிர்ணயம் செய்து இருக்கிறோம். அந்த வகையில் இதுவரை இரண்டு உறுப்பினர்கள் சேர்ந்துள்ளார்கள். இன்னும் ஆறு உறுப்பினர்கள் மட்டும் சேர்க்கப்படவுள்ளனர்.

ஸ்ரீபகவத் காட்டேஜ் உறுப்பினர்கள், வருடத்தில் எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் இதில் தங்கி தங்களுக்குச் சொந்தமாக பயன்படுத்திக் கொள்ளலாம். இவர்களது உடமைகளையும் இவர்களது அறையிலுள்ள Locker-ல் பாதுகாப்பாக வைத்துச் செல்லலாம்.

குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு ஸ்ரீபகவத் மிஷனின் அனுமதியோடு இவர்கள் தங்களது Membership – ஐ மற்றவர்களுக்கு மாற்றலாம்.

இவர்கள் இங்கு தங்காத நாட்களில் மட்டுமே மற்றவர்கள் ஞான முகாம் நடைபெறும் நாட்களில் மட்டும் தங்க அனுமதிக்கப்படுவார்கள். லாக்கர்களைப் பயன்படுத்தும் உரிமை அவர்களுக்குக் கிடையாது.

இன்னும் ஆறு உறுப்பினர்கள் மட்டுமே சேர்க்கப்பட உள்ளதால், ஆர்வம் உள்ளவர்கள் உடனடியாக தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

இது சம்பந்தமான சிறப்புத் தகவல்களுக்கு நேரடியாக போனில் தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

அன்புடன்

**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-3. 99942 05880, 97891 65555

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?





Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555

This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075



# ஆன்மிகம் போதும்; அலுவல்களைப் பார்ப்போம்!

- ஸ்ரீ பகவத்

ஆன்மிகம் என்பது கரைகாணமுடியாத கடலாக இருந்து வந்தது.

ஆன்மிகத்தின் உயர்ந்த நிலையாக ஞானமும் முக்தியும் போதிக்கப்பட்டு வந்தன.

ஞானத்தைத் தேடி அலைந்தோம் - அலைந்தேன்.

வழிகாட்டினார்கள் பலர்.

வழிகாட்டியபடி பயணித்தோம். அனுபவங்கள் பல கிடைத்தன. ஆனால் அந்த அனுபவங்கள் நிலைத்திருக்கவில்லை.

அவை வருவதும், சில நாட்கள் இருப்பதும் பிறகு மறைவதுமாக இருந்தன.

விடாமுயற்சியைக் கற்றுக்கொடுத்தார்கள். நாமும் விடாப்பிடியாகப் பின்பற்றி வந்தோம்.

நாம் நமது முயற்சியில் துவண்டு போகும்போதெல்லாம் அவர்கள் ஆறுதல் வழங்கினார்கள்.

"வாழ்க்கையின் இலக்கே ஞானமும் முக்தியும்தான். நாம் அனைவரும் பல ஜென்மங்களாக இதை நோக்கித்தான் பயணித்து வந்திருக்கிறோம். இந்த ஜென்மத்தில்தாம் நாம் அதனை நமது இலக்காக ஏற்றுக்கொண்டு முழு முயற்சியாகப் பாடுபட்டு வருகிறோம். நம்முடைய ஜென்மாந்திர வாசனைகள் நம்மைக் கீழ்நோக்கி இழுக்கத்தான் செய்யும். அவற்றையெல்லாம் வெற்றியுடன் எதிர்கொண்டு நாம் விடாமுயற்சியுடன் முன்னேறிச் செல்ல வேண்டும்"

-இவ்வாறு அவர்கள் நமக்கு ஊக்கம் கொடுத்து உற்சாகப் படுத்தினார்கள்.

நாமும் அவர்களது வார்த்தைகளினால் உற்சாகம் பெற்றுத் தொடர்ந்து பயணித்தோம். ஆனாலும் முடிவிடம் தெரியாமல் திண்டாடி வந்தோம். ஆன்மிகத்தின் வெற்றிக்காக உலகியல் பணிகள் பலவற்றைத் தியாகம் செய்தோம். அப்படியும் நமது ஆன்மிகப் பயணம் முடிவில்லாமல் தொடர்ந்துக்கொண்டே இருந்தது.

ஜே. கிருஷ்ணமூர்த்தி மற்றும் நிசர்கதத்த மகாராஜ் போன்றோர் புதியதொரு குண்டைத் தூக்கிப் போட்டார்கள்.

ஞானம் என்பது நாம் வாழ்க்கையில் கடைசியாக அடைய வேண்டிய நிலை அல்ல. ஞானம் அடைந்த பிறகுதான் நமது வாழ்க்கையே ஆரம்பிக்கிறது.

-இப்படி அவர்கள் கூறி நம்மைத் திக்குமுக்காட வைத்துவிட்டார்கள்.

ஞானம் அடைந்த பின்புதான் வாழ்க்கையே ஆரம்பிக்கிறது என்றால் நாம் இன்னும் வாழவே ஆரம்பிக்கவில்லையா?

என்றைக்குதான் நாம் ஞானமடைந்து வாழ்வதற்கு ஆரம்பிப்போம்?

நமது முயற்சி சரியானதுதானா? - நாம் சரியான திசையில் தான் பயணித்து வருகிறோமா?

என்று நாம் குழம்பித் தவித்த நிலையில்,

ஆறுதல் கூறுகிறார் ரமண மகரிஷி.

"அய்யே அதி சுலபம் ஆன்ம வித்தை" என்று.

பிறகு அவரே நம்மை பயமுறுத்துகிறார்.

"ஆன்மிகப் பயிற்சிகளை எல்லாம் டைம் டேபிள் (time table) போட்டு முயன்று வந்தால் எல்லாம் பலன் கிடைக்காது. அகோரதனம் – அல்லும் பகலும் பாடுபட்டால்தான் கிடைக்கும்."

ஆன்மிகம் சுலபமானதா அல்லது கடினமானதா?

எவ்வளவு காலம்தான் முயலவேண்டும்?

உண்மையில் நாம் அனைவரும் தவறாக வழி காட்டப்பட்டுவிட்டோம்.

நாம் வாழ்ந்து கொண்டிருக்கும் நிலையே முக்தி நிலைதான்.

அது நாம் அடைய வேண்டிய ஒன்றல்ல.

அது நாம் அடைய வேண்டிய ஒன்று என எடுத்துக்கொண்ட காரணத்தினால்தான்

அதனைத் தேடி ஓடிக் கொண்டே இருந்திருக்கிறோம்.

நாம் எத்தனையோ விதமான அனுபவங்களை அடைந்துள்ளோம். இன்பமான அனுபவங்களை அடைந்துள்ளோம்; துன்பமான அனுபவங்களை அடைந்துள்ளோம்.

ஞானம், முக்தி என்பவற்றை இன்பகரமான அனுபவங்களில் ஒன்றாக எதிர்பார்த்துக் காத்திருந்தோம்.

ஆனால் ஞானமும் முக்தியும் அனுபவங்களின் வகையைச் சேர்ந்ததல்ல.

நாம் அடைவது அனைத்தும் அனுபவங்களே. தோன்றிய அனுபவங்கள் அனைத்தும் அடுத்த கணமே மறைந்து விடுகின்றன.

அவ்வாறு மறைவதுதான் விடுதலை அல்லது முக்தி ஆகும்.

அது இயற்கையாகவே நடந்துகொண்டிருக்கிறது. நம்முடைய முயற்சி எதுவும் தேவையில்லை.

ஒரு சராசரி மனிதன் நல்ல அனுபவங்களைத் தக்க வைப்பதற்குப் போராடிவிடுகிறான்.

ஞானி ஒருவர் மட்டுமே அனுபவங்களைத் தக்க வைப்பதற்குப் போராடத் தேவையில்லை என்பதைப் புரிந்து கொண்டுள்ளார்.

முக்தி என்பது ஓர் அனுபவமாக இருக்கும் பட்சத்தில் அனுபவங்களைத் தக்கவைக்கும் முயற்சி தேவைதான்.

அதுவும் முக்தியல்ல. அதுவும் பந்தமே.

இதைப் புரிந்துகொள்வதுதான்

–வெறும் புத்திபூர்வமாக – intellectual ஆகப் புரிந்து கொள்வதுதான் ஞானமாகும்.

மற்றைய ஞானிகளும் சாஸ்திரங்களும் இதனைத்தான் கூறுகிறார்கள். ஆனால் சுற்றிவளைத்துக் கூறுகிறார்கள்.

அதனால் அதனை நேரடியாகவும் எளிமையாகவும் புரிந்து கொள்வதில் தடுமாறிவிட்டோம்.

சாஸ்திரங்கள் என்ன கூறுகின்றன?

"நாம் நம்மை உடல் என எண்ணுகின்றோம். அல்லது நம்மை மனது என எண்ணுகின்றோம். உண்மையில் நாம் இந்த உடலோ அல்லது மனமோ அல்ல. இவற்றைக் கடந்த ஆன்மாதான் நாம். ஆன்மாதான் நமது நிஜசொரூபம். நம்மை ஆன்மா என்று அறிவது தான் ஞானம். நம்மை உடலாகவோ மனதாகவோ எண்ணிக் கொள்வது அஞ்ஞானம். அதுவே நமது பந்தம். நாம், உடல் மற்றும் மனதைக் கடந்த ஆன்மா என அறிந்து கொள்வதன் மூலம் அஞ்ஞானத்தில் இருந்தும் பந்தத்திலிருந்தும் விடுபடுகிறோம். இதுதான் விடுதலை."

– இப்படி சாஸ்திரங்கள் விளக்கம் அளிக்கின்றன.

"சாஸ்திரங்களைப் படித்தேன், பாண்டித்தியம் பெற்று விட்டேன், பண்டிதன் ஆகிவிட்டேன்." என்று கூறுகிறார்களே தவிர,

"சாஸ்திரங்களைப் படித்தேன், ஞானியாகி விட்டேன்" என்று ஒருவரும் கூறுவதில்லை.

சாஸ்திரங்கள் கூறுவதைப் போன்றே, "உடல் உணர்வாகவோ மன உணர்வாகவோ ஞானத்தை எதிர்பார்க்க வேண்டாம்" என்று நாமும் புரிந்து கொண்டு விட்டோம்.

இந்தப் புரிதலை ஏற்படுத்ததான் சாஸ்திரங்களும் முயன்றுள்ளன.

இந்தப் புரிதலை ஏற்படுத்தவே சாஸ்திரங்களும், பலவகையான சாதனைகளும், பயிற்சி, முயற்சிகளும் கொடுக்கப்பட்டுள்ளன.

எல்லாவிதமான பயிற்சி முயற்சிகளும் உயர்ந்தவைகள்தாம். அதில் எந்தவிதமான சந்தேகமும் இல்லை.

அவை அனைத்தும் ஒரு வீட்டுக்கான அஸ்திவாரம் போன்றவை. அதனை ஆதாரமாகக் கொண்டே வீடு எழுப்பப்படுகிறது. அஸ்திவாரம் இல்லாத வீடு ஆட்டம் கண்டுவிடும்.

ஆனால் அஸ்திவாரமே முடிவானது அல்ல. அஸ்திவாரத்தை ஓர் அளவோடு வைத்துக் கொண்டு வீட்டைக் கட்ட ஆரம்பிக்கவேண்டும்.

நாம் வசிக்க வேண்டியது வீட்டில் தானே தவிர அஸ்திவாரத்தில் அல்ல.

எட்டாக்கனியாக இருந்த ஞானமும்

விடுதலையும் எட்டும் கனியாக மாறிவிட்டது.

எட்டிய கனியைப் புசித்த நமக்கு இனி என்ன வேலை இருக்கிறது?

கனியைப் புசித்ததோடு கனி சம்பந்தப்பட்ட வேலைகள் எல்லாம் முடிந்து விட்டன.

பள்ளிக்கூடத்தில் இறுதியாண்டு தேர்வு எழுதி வெற்றி பெற்று விட்ட மாணவனுக்கு அதன்பிறகு பள்ளிக்கூடத்தில் என்ன வேலை இருக்கிறது?

பசியாக இருந்தது. சமையல் கூடத்தினுள் நுழைந்து உணவைத் தயாரித்து உண்டு விட்டோம். பசியும் மறைந்து விட்டது.

இனி சமையற் கூடத்தில் நமக்கு என்ன வேலை?

நமது குடும்பத்துக்காக – நமக்காக – நமது சமுதாயத்துக்காக எத்தனையோ பணிகள் காத்திருகின்றன.

அவற்றையெல்லாம் இதுவரை அஞ்ஞானியாக இருந்து செய்து வந்தோம். இனி அவற்றை ஞானியாக இருந்து செயல்படுத்தலாம்.

ஒரு வேலையை கண்களை மூடிக்கொண்டு செய்வதற்குப் பதிலாக கண்களைத் திறந்து கொண்டு செய்தால் எவ்வளவு சிறப்பாக இருக்கும்.

ஒரு காலத்தில் ஆன்மிகம் என்ற பெயரில் உலகியல் முயற்சிகளையும் வசதி வாய்ப்புகளையும் இல்லற வாழ்க்கையையும் எப்படியெல்லாமோ பழித்துக் கூறியிருக்கிறோம்.

உண்மையில் உலகியல் வாழ்வு தான் முக்கியமானது. ஆன்மிகம் என்பதும் ஞானம் – விடுதலை என்பதும் அதற்கு உதவியாக வந்தவையே.

ஆன்மிகம் – ஞானம் – விடுதலை – அனைத்துமே அழகானவை. இவை நமது அன்றாட வாழ்வோடு பொருந்தி நமது வாழ்வு அனைத்தையுமே அர்த்தமுள்ளதாக ஆக்குபவை.

நாம் நமது மாணவப் பருவத்தில் நம்மை உலகத்துக் கடமைகளிலிருந்தும் குடும்பக் கடமைகளிலிருந்தும் பிரித்துக் கொண்டோம். கல்வி கற்பதில் மட்டுமே நமது கவனத்தைச் செலுத்தி வந்தோம்.

அதுபோல் ஞானம் அடையும்வரை ஆன்மிகத்தின் மீது அக்கறை காட்டுவதும் தேவைதான்; அதற்குத் தனிப்பட்ட முக்கியத்துவம் கொடுப்பதும் தேவைதான்.

நமது அக உணர்வுகளைச் சுதந்திரமாக விட்டு விட்டால் போதும்; அவற்றை ஒழுங்குபடுத்தத் தேவையில்லை – என்பதை அறிவுப்பூர்வமாகப் புரிந்து கொள்வதுதான் ஞானம்.

இதைப் புரிந்துகொண்ட நிலையில் ஆன்மிகத்துக்கான தனிப்பட்ட முக்கியத்துவம் எதுவுமே தேவையில்லை.

நாமாக அதற்கு முக்கியத்துவம் கொடுக்காவிட்டாலும் அது நமது சுவாசமாகவே நம்மோடு இருந்து நமது பணிகளுக்கெல்லாம் முழுமையைச் சேர்க்கும்.

சிலர் ஆன்மிகம் என்ற பெயரில் அமானுஷ்யங்களிலும் அபூர்வ சக்திகளிலும் மோகம் கொண்டு அதற்கான சாதனைகளில் ஈடுபட்டு வருகிறார்கள்.

நமது கருத்துகள் அவர்களை எட்டுமா?

நமது கருத்துகள் இப்போது அவர்களை எட்டாது என்பதால் அவர்களை அவர்கள் போக்கிலேயே விட்டு விடுவோம்.

இப்போது நமது பணி, நாம் வாழும் வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக ஆக்குவதே.

அர்த்தமுள்ளதாக ஆக்குவது என்றால் என்ன?

நமது வாழ்க்கையை அன்புள்ளதாக ஆக்குவதுதான் அது.

அன்புள்ளதாக ஆக்குவது என்றால் என்ன?

அன்பு என்றால் என்ன என்பதையும் சற்றுப் புரிந்து கொள்வோம்.

நம்மை விரும்புபவர்களோடு தங்கியிருப்பது நமக்கு பிடிக்குமா? அல்லது நம்மை விரும்பாதவர்களோடு தங்கியிருப்பது பிடிக்குமா?

நம்மை விரும்புபவர்களோடு தங்கியிருப்பதுதான் நம் அனைவருக்குமே பிடிக்கும்.

ஏன்?

அவர்களோடு இணைந்து இருப்பது நமக்கு துன்பத்தைத் தராது.

நம்மைப் பிடிக்காதவர்களோடு இணைந்து இருப்பது நமக்குத் துன்பத்தையே கொடுக்கும்.

இணைவது தான் அன்பு.

பொருந்தியிருத்தலே அன்பு.

முன்பு நாம் ஆன்மிகத்துக்கென சிறப்பு முக்கியத்துவம் கொடுத்து அதனோடு மட்டுமே அதிகமாகப் பொருந்தியிருந்தோம்.

இப்போது நாம் நமது பணிகளில் பொருந்திக்கொள்கிறோம். நமது பணிகளில் நமது அன்பை இணைப்பது என்பது இதுதான்.

ஆன்மிகத்துக்கு சிறப்பு முக்கியத்துவம் கொடுக்கும் வரை நமது கவனம் ஆன்மிகத்தின் மீதே குவிந்துவிடும்.

நமது உலகத்துக் கடமைகளுக்கு நாம் சிறப்பு முக்கியத்துவம் கொடுப்பதற்கும் நாம் கற்றுக்கொண்டோமாயின்,

நமது அன்பும் ஆர்வமும் அக்கறையும் நமது கடமைகளை நோக்கித் திரும்பி விடும்.

ஆன்மிகம் போதும்; நமது அலுவல்களில் அக்கறை கொள்வோமாக.

இந்த உலகமும் சுபிட்சம் அடைவதாக.

அற நெறிகள் யாவும் தழைத்தோங்குக. ★



V.A.P. **சரவணன்.** சேலம்.
செல் : 99942 05880

# கேள்வி ? பதில்...

அவமானத்தை எதிர்கொள்வது எவ்வாறு?



**கேள்வி :** எனது குடும்ப உறுப்பினர் ஒருவர் என்னை மிகவும் அவமானப்படுத்தி இருக்கிறார். அது எனக்கு மிகுந்த மன வேதனையை அளிக்கிறது. அவர் அடிக்கடி இவ்வாறு என்னை அவமானப்படுத்துவது உண்டு. அவரால் ஏற்பட்ட அவமானத்தை நான் எனக்குள் பலமுறை திரும்பத் திரும்ப நினைத்துக்கொண்டு வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிறேன். ஆனாலும் அவருடன் வாழ்ந்தாக வேண்டிய கட்டாயத்தில் இருந்து வருகின்றேன்.

வேதனைப்படும் என் மனதிற்கு நான் ஏதாவது சமாதானம் செய்துகொள்ள வேண்டுமா? அல்லது அவர் அப்படித்தான் என்று ஏற்றுக்கொள்ள வேண்டுமா? நானும் அவரிடம் எப்போதும் கோபத்துடன்தான் நடந்து கொள்கிறேன். இது சரியல்ல என்று எனக்குத் தெரிந்தாலும் என்னால் இன்னும் மாற்றிக்கொள்ள முடியவில்லை. நான் எவ்வாறு இந்த அவமான உணர்வு பிடியிலிருந்து விடுபடுவது? அவரிடம் சரியாக நடந்துகொள்வது எப்படி?

**பதில் :** ஸ்ரீ பகவத் அய்யா வழங்கும் மனதைப் பற்றிய புரிதலில், மனதின் அகம் - புறம் இயக்கங்களைத் தெளிவாகப் புரிந்து கொண்டால் இந்த பிரச்சினையிலிருந்து எளிதாக விடுபட முடியும்.

நம்முடைய முயற்சி கொஞ்சமும் இன்றி தாமாக வரும் எண்ண உணர்வுகளை நம்மால் ஒன்றுமே செய்ய முடியாது என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். நமது மனதின் அக இயக்கம் நமக்குக் கட்டுப்பட்டது கிடையாது. தாமாக வெளிப்பட்ட எண்ண உணர்வுகளை உணர மட்டும்தான் நம்மால் முடியும். அப்படி வெளிப்பட்ட எண்ண உணர்வை நீடிக்கவோ குறைக்கவோ எதுவும் நம்மால் செய்ய முடியாது. அகம் என்பது ஓர் இயந்திரகதியான இயக்கம் என்பதை தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும். நமது அறிவுப் பகுதிக்கு அகத்தில் எந்த ஒரு வேலையும் இல்லை என்பதை விளங்கிக் கொண்டால் போதும். அகத்தில் தர்மம் நியாயம் என்று எதுவும் இல்லை. அதாவது இந்த உணர்வுதான் வர வேண்டும், இந்த உணர்வு வரக்கூடாது என்று எதுவும் இல்லை. அகத்தைப் பொறுத்தவரை எல்லாமே தோன்றி மறையும் எண்ண உணர்வுகள் மட்டுமே. இப்படித்தான் நமது அக இயக்கம் செயல்படுகிறது.

அகத்தில் வெளிப்பட்ட எந்த எண்ண உணர்வுக்கும் அகத்தில் தீர்வு காண முடியாது. அகத்தில் நாம் தீர்வு காண முயற்சி செய்வது வீண் வேலை. அதுதான் அனைத்து பிரச்சினைகளுக்கும் மூல காரணமாக அமைந்துவிடுகிறது. புற உலகத்தில் நமக்குத் தேவையான செயலை செய்துகொள்வதற்கு தூண்டுகோலாக இந்த அக உணர்வை பயன்படுத்திக் கொள்ளலாம். அறிவை செயலுக்கு மட்டுமே பயன்படுத்த வேண்டும். இப்படி அறிவை முதன்மையாகக் கொண்டு செயல்படுவதுதான் புறம். மனதில் வரும் எண்ண உணர்வுகள் நமக்கு மட்டும் தெரியும். ஆனால் நாம் புற உலகில் செயல்படுவது எல்லோருக்கும் தெரியும். புறத்தில் தர்மம் நியாயம் என்று எல்லாம் உண்டு. நம்முடைய புறச் செயல் எல்லோரிடமும் தொடர்பு உடையது.

நாம் சந்திக்கும் பிரச்சினையில் எது அகம்? எது புறம்? என்பதை பிரித்துப் புரிந்து கொண்டு செயல்படும்போது எளிதாக பிரச்சனைகளுக்கு தீர்வு காண முடியும்.

அவமானத்தால் உங்களுக்கு ஏற்பட்ட மனப் பாதிப்பு, அதனால் உங்களுக்கு ஏற்பட்ட மனவேதனை, ஒரு முறை ஏற்பட்ட அவமான நிகழ்வுக்கு பலமுறை அதே நினைவு ஏற்பட்டு வருத்தப்படுவது, உங்கள் மனதிற்கு சமாதானம் சொல்லிக் கொள்வது, எப்போதும் கோபத்துடன் நடந்துகொள்வது, அந்த கோபத்தை நியாயப்படுத்துவது, பிறகு நீங்கள் கோபமா நடந்து கொண்டதற்காக வருத்தப்படுவது, நாமே சரியில்லை என்று உங்கள்மீது குற்ற உணர்வு கொள்வது என மேற்சொன்ன அனைத்தும் அகம். இதில் நமக்கு எந்த வேலையும் இல்லை என்பதை நீங்கள் முதலில் புரிந்து கொள்ள வேண்டும்.

ஒரு முறை நடந்த நிகழ்வை பலமுறை நீங்களாக திரும்ப எண்ணிக் கொண்டு உங்களை வருத்திக் கொள்ள வேண்டாம். உங்களது கவனமே இன்றி தாமாக ஏற்படும் அவமான உணர்வு எத்தனை முறை திரும்பத் திரும்ப வந்தாலும், அவை தாமாக வரும் எண்ணம் - அகம் என்று தான் எடுத்துக் கொள்ள வேண்டும். நம்மையறியாமல் வரும்

எண்ணத்திற்கு நாம் எந்த பொறுப்பும் முக்கியத்துவமும் கொடுக்கத் தேவையில்லை.

உங்களது மனதின் கவனத்திற்கு வராத வரை நீங்களாக சிந்தித்தாலும்கூட அதையும் எண்ணம் – அகம் என்று எடுத்துக் கொள்ள வேண்டும். மனதின் கவனத்திற்கு வந்த பிறகுதான் உங்களுக்கு என்ன செய்ய வேண்டும் என்ற பொறுப்பு ஆரம்பிக்கின்றது.

நீங்கள் மனதிற்கு கொடுக்கும் எந்த சமாதானமும் உதவாது.

மேற்கூறியவை அனைத்தும் உங்கள் மனதின் அக இயக்கம் சம்பந்தப்பட்டது. இங்கு நமக்கு எந்த வேலையும் இல்லை.

இனி பிரச்சினையின் புறப் பகுதியைப் பார்ப்போம்.

குடும்ப உறுப்பினர் உங்களை தொடர்ந்து அவமானப்படுத்துகிறார் என்றால், உங்கள் செயல் பகுதியில் ஏதேனும் தவறு இருக்கிறதா? என்பதை ஆராயுங்கள். அப்படி தவறு இருக்கும்பட்சத்தில் அதை திருத்தி அமைத்துக் கொள்ளுங்கள். இதனால் நீங்கள் உங்களையே சரியில்லை என்று எந்த சூழ்நிலையிலும் எடுத்துக் கொள்ள வேண்டாம். செயலை தான் மாற்ற வேண்டுமே தவிர ஒரு போதும் உங்களை குறை காணத் தேவையில்லை.

உங்களது செயல் சரியாக இருக்கும் பட்சத்தில் அவரின் செயல்பாட்டிற்கு நாம் முக்கியத்துவம் அளிக்கத் தேவையில்லை.

அவரை மாற்ற முடியாத பட்சத்தில், அவரை மனநிலை பாதிப்புக்கு உள்ளானவராகக் கூட எடுத்துக் கொள்ளலாம். அவர் அப்படித்தான் என்று எடுத்துக்கொள்ள வேண்டும். இப்படி நீங்கள் மனதளவில் எடுத்துக் கொள்வதால் அவருக்குத் தேவையானவற்றை செய்வதில் எந்த சிரமமும் இருக்காது. அவர்களது எந்த கடும் வார்த்தைகளும், செயலும் உங்களை பாதிப்படையச் செய்யாது. இந்த அணுகுமுறையில் அவரை அணுகும்போது உங்களுக்குக் கோபம் ஏற்படாது.

உங்கள் கவனத்திற்கு வராமல் கோபமாக நடந்து கொண்டாலும், சரி என்று எடுத்துக் கொள்ளுங்கள். உங்களுக்கு கவனத்திற்கு தெரிந்த பிறகு நீங்கள் கோபமாக நடந்து கொள்ள வேண்டிய அவசியம் இல்லை.

நீங்கள் அவரிடம் தொடர்ந்து கோபமாக நடந்து கொள்வதால் நிச்சயமாக அவரிடமிருந்து எந்த மாற்றமும் ஏற்படப்போவதில்லை. அவரைப் பற்றி இதுவரை சேர்த்து வைத்திருக்கும் முன் கருத்துதான் அவரிடம் கோபமாக நடந்து கொள்வதற்குக் காரணமாக அமைகிறது.

முன் கருத்து என்பது என்ன? ஒருவர் நம்மிடம் இதுவரை எப்படி நடந்து கொண்டிருக்கிறார் என்பதை வைத்து அவரைப் பற்றி ஒரு கருத்து வைத்திருப்போம். அந்த ஒட்டு மொத்த கருத்து சேகரிப்பே – முன் கருத்தாகும். இதுவே அவரைப் பற்றி நாம் வைத்திருக்கும் அபிப்பிராயம் ஆகும். அவர் சாதாரணமாக செய்யும் சின்ன சின்ன தவறு கூட நீங்கள் அவரைப்பற்றி ஏற்கெனவே வைத்திருக்கும் முன் கருத்துடன் சேர்த்து பார்க்கும் போதுதான் கோபம் நீடித்துக் கொண்டே போகிறது.

உதாரணமாக நாம் ஒருவரைப் பற்றி தவறாக வைத்திருக்கும் முன் கருத்து 80% என்று வைத்துக் கொள்வோம். அவர் நம்மிடம் சாதாரணமாக நடந்து கொள்ளும்போது நமக்கு ஏற்படும் பாதிப்பு 20% என்று வைத்துக் கொள்வோம்

இப்படி அவர் சாதாரணமாக நடந்துகொண்ட 20% பாதிப்பிற்கு மட்டும் தான் நாம் நமது தரப்பிலிருந்து அவ்வளவு கோபமாக செயல்படுகிறோமா?

நிச்சயமாக இல்லை. நாம் சேகரித்து வைத்திருக்கும் 80% முன் கருத்தையும் இப்போது சாதாரணமாக நடந்த 20% பாதிப்புடன் சேர்த்து நாம் 100% கோபமாக செயல்படுகிறோம். சாதாரணமாக நடந்த 20% மன பாதிப்பு நம்மை பெரிய அளவில் பாதிப்படையச் செய்யாது. நாம் சேகரித்து வைத்திருக்கும் 80% முன் கருத்தும் இந்த 20% பிரச்சினை பகுதியும் சேரும்பொழுதுதான் நாம் நமது தரப்பிலிருந்து 100% கோபத்துடன் அதற்கு எதிர் விளைவாக (Counter action) செயல்படுகிறோம்.

நம்மை அறியாமல் இப்படி நடந்துகொண்டால் தவறில்லை.

நீங்கள் சேகரித்து வைத்திருக்கும் முன் கருத்திலிருந்து விடுபட்டு நிதானத்திற்கு வந்த பிறகு அவர் உங்களிடம் என்ன எதிர்பார்க்கிறார் என்பதை புரிந்து கொண்டு உங்களால் செயல்பட முடியும். அவரைப் பற்றி நீங்கள் வைத்திருக்கும் முன் கருத்திற்கு முக்கியத்துவம் அளிக்க தேவையில்லை. இப்படி செயல்படும்போது மட்டும்தான் அவர் உங்களிடம் என்ன எதிர்பார்க்கிறார் என்பதே உங்களுக்கு புரியும். அதற்கு நாம் என்ன செய்ய வேண்டும் என்பதும் புரியும்.

அகத்தில் தீர்வு காண வேண்டிய அவசியம் இல்லை. செயலில் மாற்றம் செய்வது ஒன்று மட்டுமே அனைத்துப் பிரச்சினைகளுக்கும் தீர்வு.

K.S. ஜீவமணி
செல் : 97891 65555

# ஆசிரியர் பகுதி



அனைவருக்கும் சக பயணியின் வணக்கம்.

நமது வாழ்க்கையை திறம்பட வாழ்வதற்கு பகுத்தறிவு மிகவும் அவசியம்.

நமது பகுத்தறிவு வளர்ச்சியின் காரணமாகவே வாழ்க்கை வளங்களையும் பொருளாதாரத்தையும் உயர்த்திக்கொள்ள முடியும்.

உலகில் நமது பயன்பாட்டிற்கு வந்துள்ள எத்தனையோ நவீன கருவிகள் கூட நமது அறிவு வளர்ச்சியால் ஏற்பட்ட தொழில்நுட்பமே காரணம்.

இப்படி பகுத்தறிவானது புறத்தில் சரியான செயலுக்குப் பயன்படும் போது, வாழ்க்கை வளங்களாக மாறிவிடுகிறது.

இதே பகுத்தறிவு அகத்தில் செயல்படும்போது அகப் பிரச்சினையை உண்டாக்கி விடுகிறது.

ஒட்டுமொத்த மனித குலத்தின் மனப் பிரச்சினைகளுக்கும் காரணம் பகுத்தறிவைக் கொண்டு மனதை நிர்வாகம் செய்வதுதான்.

பகுத்தறிவுக்கான வேலை புறம் மட்டுமே. அகம் அல்ல.

நல்லது – கெட்டது, சரியானது – தவறானது, தேவையானது – தேவையில்லாதது என்பதெல்லாம் புறம் சார்ந்தது. இப்படி அறிவைக்கொண்டு பகுத்துப் பார்த்துச் செயல்பட வேண்டிய இடம் புறம் மட்டுமே.

இப்படி செயல்படும்போது மட்டுமே நம்மால் சிறப்பாக செயல்பட முடியும்.

ஆனால் நமது அகத்தில் பகுத்தறிவைக் கொண்டு முயலும்போது அகம் போராட்டக் களமாக மாறி விடுகிறது. நமக்கு ஏற்படும் உணர்வுகளில், எண்ணங்களில் இது நல்ல எண்ணம்; இது மோசமான எண்ணம் என்றும் இது நல்ல உணர்வு; இது மோசமான உணர்வு என்றும் பகுத்துப் பார்க்கும் போது தான் அவைகளை நிர்வகிக்க வேண்டிய வேலையும் வந்துவிடுகிறது.

உண்மையில் அகம் நம் கட்டுப்பாட்டில் இல்லாத பகுதி. கட்டுப்பாட்டில் இல்லாத பகுதியை நிர்வாகம் செய்வதுதான் போராட்டத்தை ஏற்படுத்தி விடுகிறது.

நமக்கு ஏற்படும் அனைத்து எண்ணங்களும் உணர்வுகளும் இயற்கையானவை. அவை சூழ்நிலைக்கேற்ப தாமாகவே தோன்றி தாமாகவே மறைந்துவிடும். புறச் செயல்களுக்கு தேவையான எண்ணங்களையோ உணர்வுகளையோ செயலுக்கு தூண்டுகோலாக எடுத்துக்கொள்ளலாம். மற்றபடி அவைகளை நிர்வாகம் செய்யும் எந்த பொறுப்பும் நமக்கில்லை.

நம் அகத்தின் வழியாகத்தான் உலகையே காணுகிறோம். ஆதலால் அகத்தின் உதவியால் உலகை நிர்வாகம் செய்யலாம். ஆனால் ஒருபோதும் அறிவைக் கொண்டு அகத்தை நிர்வாகம் செய்யக் கூடாது.

அறிவுக்கு அகத்தில் வேலையில்லை என்று புரிந்து கொள்வதே ஞானம்.

இந்தப் புரிதலோடு புறத்தை நிர்வாகம் செய்யும் போது நமது செயல்கள் அனைத்தும் சரியான செயலாக அமைந்து விடுகிறது.

இந்த புரிதலே அகத்தில் துறவையும் வழங்குகிறது.

அகத்தில் துறவோடும், புறத்தில் உறவோடும் வாழும் வாழ்க்கையே சரியானது.

உலகை உறவோடு பார்க்கும் பார்வையே நமது நற்செயலுக்கு அடித்தளமாக அமைகிறது.

ஸ்ரீ பகவத் ஐயா வழங்கும் ஞானத்தெளிவை பெறுபவர்கள் அனைவரும் அக விடுதலையோடு வாழ்க்கையை வாழ்வாங்கு வாழ்பவர்களாகிவிடுகிறார்கள்.

இந்த ஞானத்தெளிவை உலகம் முழுவதும் கொண்டு சேர்ப்பதே நமது நோக்கம்.

தற்போது சமூக இடைவெளியைக் கடைபிடிக்க வேண்டிய கால கட்டத்திலும், YouTube- வழியாகவும் zoom meeting- வழியாகவும் உண்மையை உரைத்து வருகிறோம்.

இதில் பலரும் பயன் பெற்று வருகின்றனர். நாளுக்கு நாள் பயன் பெறுவோரின் எண்ணிக்கையும் அதிகரித்து வருகிறது.

மேலும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் பிறந்தநாளான 12-9-2020 அன்று சேலத்தில் நமது இல்லத்தில் மிக எளிமையாக கொண்டாடப்பட்டது.

மேலும் ஞானத் தெளிவுதரும் ஐயாவின் நூல்களை அனைவரும் வாங்கிப் படித்து பயன்பெற வேண்டும் என்ற நோக்கில் அச்சிடும் விலையைவிட குறைந்த விலையில் வழங்கி வருகிறோம். இதன் செலவுகளை எதிர்கொள்ளவும் மிஷன் செலவுகளை எதிர்கொள்ளவும் பலர் மாதம் ரூ 1000/- வழங்கி புரவலர்களாக இணைந்து வருகிறார்கள். இவர்களுக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

பயனடைந்தவர்கள் அனைவரும் இணைந்து செயல்படும் போது ஐயாவின் கருத்தை உலகம் முழுவதும் கொண்டு செல்லும் நமது பயணமும் எளிதாகிவிடும்.

அனைவரும் இணைவோம்!
ஞானத்தைப் பகிர்வோம்!!

# ஜென் கதை

## "விதியை மாற்ற முடியுமா ?"

ஒரு நடுத்தர வயதுடைய குடும்பஸ்தன் இருந்தான். அவன் வறுமையில் வாடினான். அவன் ஜாதக ஜோதிடத்தில் அதீத நம்பிக்கை வைத்திருந்தான். அவன் எந்த காரியத்தை செய்தாலும் தோல்விதான் கிடைக்கும் என்று அவன் ஜாதகத்தில் எழுதியிருந்தது. இதை அவன் உறுதியாக நம்பிக் கொண்டிருந்தான்.

இதனால் அவனுக்கு உழைப்பின் மீது நம்பிக்கை இல்லை. அவனுடைய நாட்களெல்லாம் துயரத்திலேயே கழிந்தன.

ஒருநாள் அவனுக்கு சாப்பாட்டுக்கே வழியில்லாமல் போய்விட்டது. அவனுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. யாரிடமாவது தன் கஷ்டங்களைச் சொல்லி உதவி கேட்கலாம் என்று நினைத்து ஒரு ஜென் குருவைச் சந்தித்தான்.

"குருவே நான் எடுத்த காரியம் எதுவும் பயனளிக்காது என்று என் ஜாதகத்தில் எழுதியிருக்கிறது...

"நான் என்ன செய்வேன்? விதியை மாற்ற யாரால் முடியும்? என் கஷ்டங்களில் இருந்து எப்படி மீள்வேன்?"

குரு வாசலுக்குச் சென்றார். ஒரு சிறிய கல்லை எடுத்து மேல் நோக்கி எறிந்து விட்டுச் சொன்னார்.

"நண்பனே அதோ மேல் நோக்கிச் சென்ற அந்தக் கல்லின் விதி என்ன? கீழே விழ வேண்டும் என்பதுதானே? இந்த இடத்தில் கீழே விழுவது தான் அதன் விதி. ஆனால் அந்தக் கல் கீழே விழுவதற்கு முன்பு என்னால் கையால் பிடிக்க முடியும். பாதியிலேயே அதை அடித்து வேறு இடத்தில் விழச் செய்ய முடியும். அந்தக் கல் தரை தொடும் முன்பே அதை பலமாகத் தட்டி விட்டு தொலைவில் விழச் செய்ய முடியும். இதைப் போன்றதுதான் விதியும். இது போல உன் விதியை மாற்ற வேறு ஒரு புதிய விதியை உன்னால் உருவாக்க முடியும். புதிய விதி என்பது தான் உனது அறிவுப்பூர்வமான செயல்....

"உனக்கு மிக மோசமான சூழ்நிலைகள் கூட ஏற்படலாம். அந்த சூழ்நிலைக்கு ஏற்ற சரியான செயலை உன் அறிவைக் கொண்டு செயல்படுவதன் மூலம் மோசமான சூழ்நிலையைக் கூட மாற்றி வெற்றி அடைய முடியும்...

"உன் வெற்றியை தீர்மானிப்பது விடாமுயற்சியும் கடும் உழைப்பும் தான். உன் செயல்கள் தான் உன் வாழ்வைத் தீர்மானிக்கும்" என்று கூறினார்.

விதி என்று ஓய்ந்திருக்கலாகாது என அந்த ஏழை மனிதன் புரிந்து கொண்டான். புதிய நம்பிக்கையுடனும் உற்சாகத்துடனும் வாழ்வை எதிர்கொண்டான்.

"விதியை மாற்றும் வல்லமை நல்ல செயல்களுக்கு உண்டு"

## பகவத் பாதை சந்தா விபரம்

நமது பகவத் பாதை மாத இதழானது ஒவ்வொரு மாதமும் 10-ம் தேதிக்குள் தபாலில் அனுப்ப வைக்கப்படுகிறது. இது அதிகபட்சமாக 15 நாட்களுக்குள் அனைவரது இல்லங்களையும் வந்து சேரும் என்று எதிர்பார்க்கிறோம். எனவே ஒவ்வொரு மாதமும் 25ம் தேதிக்குள் "பகவத் பாதை" தங்களுக்கு வராதவர்கள் போனில் தொடர்பு கொண்டோ அல்லது "Pathai Missing" என்று Type செய்து சந்தா எண்ணுடன் தங்களது முழு முகவரியையும் கீழ்க்கண்ட எண்ணுக்கு SMS அனுப்பியோ தகவல் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

புதிதாக சந்தா செலுத்த விரும்புபவர்கள் இதுவரை சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்க்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| ஓர் ஆண்டு சந்தா | - | ரூ. 100/- |
| ஐந்தாண்டு சந்தா | - | ரூ. 500/- |
| ஆயுள் சந்தா | - | ரூ. 1000/- |

சந்தாத் தொகையை "Sri Bagavath Mission" என்ற பெயரில் M.O. அல்லது சேலத்தில் செல்லத் தக்க D.D. (or) Checque மூலம் அனுப்பலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் HDFC Bank - Sri Bagavath Mission A/o. No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 என்ற கணக்கில் செலுத்தலாம். Bank A/c-ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 7904118421 என்ற எண்ணிற்கு SMS மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

# நிகழ்ச்சி நிழல்கள்



ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் பிறந்த நாள் அன்று.





















ஓய்வு நேரத்தில்







நமது அன்பர் கோவை. திரு. சசிகுமார் குடும்பத்தினருடன்.

ஆகாமிய கர்மா
நூலின் மூன்றாம் பதிப்பு

**கர்ம வினை–
விடுபவது
எவ்வாறு ?**

என்ற தலைப்பில்
மேலும் 4 புதிய கட்டுரைகள்
இணைக்கப்பட்டு ஆகஸ்டு
மாதத்தில் வெளிவந்துள்ளது.

விலை ரூபாய் **150/-**




ஆகாமிய கர்மா நூலின் மூன்றாம் பதிப்பு கர்மவினை – விடுபடுவது எவ்வாறு? என்ற தலைப்பில் வெளியிட்டுள்ளோம்.

இதில் புதிய இணைப்பாக மேலும் நான்கு கட்டுரைகளை இணைத்துள்ளோம்.

1. தற்கொலை
2. இந்தப் பிறவியில் செய்த பாவங்களுக்கான தண்டனை அடுத்த பிறவியில் கிடைக்குமா?
3. அமானுஷ்யம்.
4. ஜாதக ஜோதிடம்.

அனைவரும் வாங்கிப் பயன் பெறுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

**ஸ்ரீ பகவத் மிஷன்**

# புரவலர்கள்

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

நமது ஸ்ரீபகவத் மிஷனில் வருவாய் ஈட்டும் நோக்கத்தோடு எந்தச் செயலும் செய்வதில்லை.

அய்யாவின் கருத்துக்களை உலகம் முழுவதும் உள்ள ஆன்மிகத் தேடுதல் மிகுந்தவர்களிடத்தும், மனவேதனைகள் உள்ளவர்களிடத்தும் கொண்டு செல்ல வேண்டும் என்பது மட்டுமே நமது நோக்கம்.

இதன் காரணமாகவே ஐயாவின் அனைத்து நூல்களையும் மாத இதழ்களையும் இலவசமாக download செய்துகொள்ளும் வசதியையும், மிகக்

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 |
Postal Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020
Date of Publication : First Week of Every Month |
Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission,
31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555

குறைந்த விலையில் ஐயாவின் நூல்களையும் வழங்கி வருகிறோம்.

எனவே ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் வேண்டுகோளை ஏற்று தாங்களாகவே முன் வந்து அய்யா அவர்களது தனிப்பட்ட செலவுகளிலும் ஸ்ரீ பகவத் பவனின் செலவுகளிலும் பங்கு கொள்ளப் பலர் புரவலர்களாக இணைந்து பகவத் ஐயாவின் குடும்ப உறுப்பினர்கள்தாம் என உறுதி செய்துள்ளீர்கள்.

உங்கள் அனைவருக்கும் எங்களது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இது வரை ஆயிரக்கணக்கானவர்கள் ஐயாவின் கருத்துகளினால் ஞானமடைந்துள்ளனர். இன்னும் ஆயிரக்கணக்கானவர்கள் ஞானமடையக் காத்திருக்கின்றனர்.

ஆன்மிக உலகில் இது வரை இத்தகைய மாற்றம் ஏற்பட்டது இல்லை. இது ஒரு புதிய சகாப்தம்.

இதற்கு முன்னால் எங்கோ ஒருவர் எப்படியோ ஞானமடைந்திருப்பார். ஆனால் இப்போது எவர் வேண்டுமானாலும் ஞானமடையலாம் என்ற அளவில் ஞானமும் முக்தியும் எளிதாக்கப்பட்டுவிட்டன.

ஆன்மிகத்தில் பல காலத்தேடுதலில் கூட கிடைக்காத ஞானத் தெளிவு ஐயாவின் புதிய சரியான அணுகுமுறையினால் எளிதில் பலரும் துன்பங்களையும் துயரங்களையும் கடந்து விடுதலையோடு வாழ்ந்து வருகின்றனர்.

ஆன்மிக ரீதியாகவும் உளவியல் ரீதியாகவும் புதிய மாற்றத்தை ஏற்படுத்தக் காரணமான நமது அய்யாவுடன் நாம் அனைவரும் முதல் நிலை குடும்ப உறுப்பினர்களாகப் பங்கு வகித்திட இதனை ஒரு நல் வாய்ப்பாகப் பயன்படுத்திக் கொள்வோமாக.

மேலும் புரவலராக இணைய வாய்ப்புள்ள அன்பர்கள் இணைந்து உதவுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

இதன் மூலம் வியாபார நோக்கில் ஈடுபட்டு வருவாய் ஈட்டுவதில் நாட்டமில்லாத நமது ஸ்ரீ பகவத் மிஷன் மற்றும் ஸ்ரீ பகவத் பவன் ஆகியவற்றின் தொண்டிலும் அன்றாடச் செலவினங்களிலும் நீங்கள் பங்கேற்றிட முடியும்.

மாதந்தோறும் ரூ1000/= வழங்கும் புரவலராகவோ அல்லது மாதந்தோறும் ரூ500/= வழங்கும் சிறப்புப் புரவலராகவோ பொறுப்பேற்றிட வேண்டுகிறோம்.

ஸ்ரீ பகவத் மிஷன் Account HDFC Bank & SBI Bank ல் உள்ளது. இவற்றில் எதில் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

**Sri Bagavath Mission,** Hdfc bank A/c No.15907620000075 NEFT IFSC : HDFC0001590
**Sri Bagavath Mission,** SBI Bank A/c No. 31784345329 IFS Code: SBIN0012772

அன்புடன்
**ஜீவமணி & சரவணன்,** ஸ்ரீ பகவத் மிஷன்.




அனைவருக்கும் வணக்கம்.

**ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் மிக முக்கியமான நூல் "கவலைகள் அனைத்திற்கும் தீர்வு"** எனும் நூல்.

இந்நூல் மனிதகுலத்தின் எல்லா துக்கங்களையும் துயரங்களையும் எளிதில் கடந்து செல்லும் வல்லமையை கொடுத்து ஞானத்தெளிவை வழங்கும் நூல்.

இந்நூல் 258பக்கங்களில் மிகவும் தரமான முறையில் வடிவமைக்கப்பட்டுள்ளது.

இதுவரை இந்நூல் ரூபாய் **250/-** க்கு வழங்கி வந்தோம். தற்போது இந்நூல் அனைவரையும் சென்றடைய வேண்டும் என்ற நோக்கில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி இந்நூலை அதன் அடக்கச் செலவைவிட குறைந்த விலையில், ரூபாய் **50/-** க்கு வழங்கி வருகிறோம்.

எனவே அனைவரும் வாங்கிப் பயன் பெறுவதோடு நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் அன்பளிப்பாக வழங்கி அவர்களும் உயர்வு பெற உதவலாம்.

அன்புடன் **ஸ்ரீ பகவத் மிஷன்**